# இஸ்லாம் மத பாடம்

## இரண்டாம் வகுப்பு












க ... த்தக நிலையம், கண

# இஸ்லாம் மத பாடம்

## இரண்டாம் வகுப்பு

[அரசினரின் புதிய பாடத்திட்டப்படி எழுதப்பட்டது.]

வித்தியாதிபதியவர்களால் இஸ்லாம் மத பாடப்புத்தக
மாக 2-8-57ல் அங்கீகரிக்கப்பட்டது.

ஆசிரியர் :
A. M. கனி அவர்கள்
உடத்தலவின்னை, கட்டுகாஸ்தோட்டை

கலைவாணி புத்தக நிலையம்
130, திரிகோணமலை வீதி, கண்டி



[விலை சதம் 50

இலங்கைப் பிரதிநிதிகள் சபைச் சபாநாயகர்
**எச். எஸ். இஸ்மாயில்,**
அவர்களால் அளிக்கப்பட்ட

# மதிப்புரை

OFFICE OF THE SPEAKER
HOUSE OF REPRESENTATIVES
COLOMBO
1st *April* 1957

இவ்விலங்கைத் தீவிலுள்ள அரசினர் பாடசாலைகள் உதவி நன்கொடை பெறும் பாடசாலைகட்குச் சமுக மளிக்கும் முஸ்லிம் மாணவர்களுக்குக் குறையாகக் காணப் படுவது இஸ்லாமிய (சமய) வாசினைப் புத்தகங்களாம்.

ஒரு சில மதாபிமானமுள்ள முஸ்லிம் ஆசிரியர்கள் நீண்டகாலக் குறையை நிவர்த்திக்க முன்வந்துள்ளமை புகழத்தக்கதாம்.

இக்கைங்கரியத்தில் வெற்றியளிக்கப் பிரார்த்திக் கின்றேன்.

கையெழுத்துப் பிரதிகளை யான் பார்வையிட்டபோது அவை இஸ்லாமிய மதக் கல்விக் கேற்றனவாய்க் காணப் பட்டன.

இப்புத்தகங்களை முஸ்லீம் பாடசாலைகளின் அதிபர் கட்கும் தலைமையாசிரியர்கட்கும் யான் சிபார்சு செய் கின்றேன்.

**எச். எஸ். இஸ்மாயில்**
சபாநாயகர்
பிரதிநிதிகள் சபை

அட்டாளைச்சேனை அரசினர் முஸ்லிம்
ஆசிரிய கலாசாலை அதிபர்
**ஜனாப் ஐ. எல். எம். மஷ்ஹூர், B.A.**
அவர்களால் அளிக்கப்பட்ட

# அணிந்துரை

சிரேஷ்ட வகுப்புகளுக்கு இணக்கமான ஒரு சில இஸ்லாமிய சமய நூல்கள் சமீப காலத்தில் வெளிவந்துள்ளன. எனினும் ஆரம்ப வகுப்புகளில் கல்வி பயிலும் முஸ்லிம் சிறுவர்களுக்கும் இஸ்லாம் பாடம் ஒரு பொருத்தமான நூலின் உதவியின்றியே இதுவரை கற்பிக்கப்பட்டு வந்துள்ளது. எனவே ஆசிரியர் ஏ. எம். கனி அவர்களால் இக்குறையை நீக்கு முகமாக எடுக்கப் பட்டுள்ள இச்சிறந்த முயற்சி பெரிதும் பாராட்டத் தக்கது.

இரண்டாம் தரம் முதல் ஐந்தாம் தரம் ஈறுக கல்வி பயிலும் இளம் இஸ்லாமிய சிறுர்களுக்கு ஏற்றவிதமாய் எளிய நடையில் இஸ்லாம் சமய பாடங்களை ஒழுங்கு படுத்தி ஆக்கப் பெற்றது இந்நூல்.

இச்சிறந்த சேவை இளம் சந்ததியினர் இஸ்லாமிய அடிப்படையில் கல்விப் பயிற்சி பெறுவதற்கு ஏற்ற பயனளிக்கும் என்பதில் ஐயமில்லை.

**இ. லெ. மு. மஷ்ஹூர்**
அதிபர்
அரசினர் முஸ்லிம் ஆசிரியகலாசாலை

அட்டாளைச்சேனை
23–3–57

# முன்னுரை

**சர்வ புகழும் வல்ல இறைவனுக்கேயாம்**

நீண்ட நாட்களாக முஸ்லிம் பாடசாலைகளில் கல்வி பயிலும் இஸ்லாமிய மாணவர்கட்கு வகுப்புக்கேற்ற இஸ்லாமிய மத பாடப் புத்தகம் வெளிவராதிருந்தமை பெருங்குறையேயாகும். இது கால வரை பாடத்திட்டத்தைத் தழுவி மௌலவி ஆசிரியர்களால் இப்பாடம் படிப்பிக்கப்பட்டு வந்தது. எனினும் பாடப் புத்தகமின்றி கீழ் வகுப்பு மாணவர்கட்கு இஸ்லாம் படிப்பிப்பதற்கும், மாணவர்கள் ஆயத்தம் செய்வதற்கும் இஸ்லாம் பாடப் புத்தகங்களை இரண்டாம் வகுப்பு முதல் ஒவ்வொரு வகுப்புக்கட்கும் வெளிப்படுத்த வேண்டுமென்று சகோதர ஆசிரியர்கள் என்னை அடிக்கடி வற்புறுத்தினார்கள். அவர்களின் தூண்டுதல் காரணமாக யானும் இப்புத்தக வரிசையை வெளியிடலாமெனத் தீர்மானித்தேன்.

மார்க்க அறிவிற் குறைந்த யான் இம்மாபெரிய காரியத்தைச் செய்யத் தீர்மானிப்பதே பெரிய குற்றமாகும். இந்நிலையில் மார்க்க அறிவில் நிறைவுபெற்ற ஆசிரியர்களும் மௌலவி ஆசிரியர்களும் உதவி புரிந்தமையால் துணிந்து எழுதலானேன்.

இப்புத்தகங்கள் பூரணமாவதற்குப் பல புத்திமதிகள் கூறியும், பார்வையிட்டுத் திருத்தியும், அரபி வசனங்களைப் பிழையற எழுதியும் உதவிய ஜனுப்களான மௌலவி எம். ஜமால்தீன் (பஹ்ஜி) அவர்களுக்கும், மௌலவி S. M. அப்துல்காதர் (பஹ்ஜி) அவர்களுக்கும் எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இதனைப் பார்வையிட்டு மதிப்புரைகள் வழங்கிய இலங்கைப் பாராளுமன்ற சபாநாயகரான மதிப்பிற்குரிய ஜனுப் எச். எஸ். இஸ்மாயில், M. P. அவர்கட்கும், அட்டாளைச்சேனை அரசினர் முஸ்லீம் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலை அதிபர் ஜனுப் ஐ. எல். எம். மஷ்ஹூர் B. A. அவர்கட்கும், எனது பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இப்புத்தக மூலம் படிப்பிக்கும் ஆசிரியர்கள் இதிலுள்ள குர்ஆன் ஆயத்துக்களையும் அரபி வசனங்களையும் திருத்தமான உச்சரிப்புடன் படிப்பிக்க வேண்டுமென அன்புடன் வேண்டுகின்றேன். இப்புத்தக வரிசையை ஆசிரிய, மாணவ உலகம் வரவேற்று இன்னும் இஸ்லாமிய புத்தகங்கள் வெளியிடுவதற்கு உற்சாகமளிப்பார்களென எதிர்பார்க்கின்றேன்.

எனது இஸ்லாமிய சேவையின் முதற்படி இதுவாதலின் இப்புத்தகங்களுள் பல பிழைகள் ஏற்பட இடமுண்டு. அப்பிழைகளை உடனுக்குடன் சகோதர ஆசிரியர்கள் அறியத் தருவார்களாயின் அப்பிழைகளை அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிட ஆயத்தமாயிருக்கின்றேன்.

இப்புத்தகம் வெளிவரப் பெருமுயற்சி யெடுத்த **கலைவாணி பதிப்பகத்தாருக்கும்** எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

இப்படிக்கு
ஆசிரியர்,
A. M. கனி,
உடத்தலவின்னை, கட்டுகாஸ்தோட்டை.

# பொருளடக்கம்


| பாடம் | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | ஈமான் | ... | 1 |
| 2. | மலக்குகள் | ... | 5 |
| 3. | வேதங்கள் | | |
| | (i) தௌராத் வேதம் | | |
| | (ii) ஸபூர் வேதம் | | |
| | (iii) இன்ஜீல் வேதம் | | |
| | (iv) புர்கான் வேதம் | | |
| 4. | சுத்தம் | ... | 10 |
| | (i) மலஜலங்களை நீக்கிச் சுத்தம் செய்தல் | | |
| | (ii) உடலையும் உடையையும் சுத்தம் செய்தல் | | |
| 5. | வுழூஉ | ... | 14 |
| 6. | வுழூஉக்குப் பின்உள்ள ஓதல்கள் | ... | 17 |
| 7. | அத்தஹிய்யாத்து | ... | 20 |
| 8. | நபிகள் நாயகத்தின் (ஸல்) சரிதை | ... | 21 |
| | (i) நபிகள் நாயகத்தின் (ஸல்) இளமை | | |
| | (ii) நாயகத்தின் பிள்ளைகள் | | |
| 9. | நபிப் பட்டம் கிடைத்தல் மிஃராஜ் யாத்திரை | ... | 25 |
| 10. | நபிகள் நாயகம் மதீனுவுக்கு ஹிஜ்ரத் செல்லல் | ... | 28 |
| 11. | நாயகத்தின் நன்மொழிகள் | ... | 31 |

# இஸ்லாம் மத பாடம்

## இரண்டாம் வகுப்பு



## 1. ஈமான் (நம்பிக்கை)

**சிறுவர்களே !**

**இஸ்லாமியர்களாகிய நாம் ஆறு காரியங்களைக் கொண்டு ஈமான் கொள்ளவேண்டும். இது மிகவும் அவசியமான தாகும்.**

**அவையாவன :**

آمَنْتُ بِاللهِ وَمَلٰئِكَتِهٖ وَكُتُبِهٖ وَرُسُلِهٖ
وَالْيَوْمِ الْاٰخِرِ وَالْقَدْرِ خَيْرِهٖ وَشَرِّهٖ
مِنَ اللهِ تَعَالٰى ......

**" ஆமன்து பில்லாஹி வமலாஇகதிஹி வகுதுபிஹி வருஸுலிஹி வல்யவ்மில் ஆகிரி வல்கத்ரி கைரிஹி வஷர்ரிஹி மினல்லாஹி தஆலா "**

1. **ஆமன்து பில்லாஹி** – அல்லாஹு தஆலாவின் மீது ஈமான் கொண்டேன்.

2. **வ மலாஇகதிஹி** – அவனுடைய மலக்குள் மீது ஈமான் கொண்டேன்.

3. **வ குதுபிஹி** – அவனுடைய வேதங்களின் மீது ஈமான் கொண்டேன்.

4. **வ ருஸுலிஹி** – அவனுடைய நபிமார்கள் மீது ஈமான் கொண்டேன்.

5. **வல்யவ்மில் ஆகிரி** – அவனுடைய கடைசி நாள் மீது ஈமான் கொண்டேன்.

6. **வல்கத்ரி கைரிஹி வஷர்ரிஹி மினல்லாஹி தஆலா** – நன்மையும் தீமையும் அல்லாஹு தஆலாவின் விருப்பத்தைக் கொண்டுள்ளது என்றும் ஈமான் கொண்டேன்.

மேலே கூறியவற்றில் 6 விஷயங்கள் அடங்கியுள்ளன. அவையாவன :—

1. ஆண்டவன் ஒருவன் என்றும், அவனே உலகத்தையும், ஏனைய உயிர்களையும் படைத்தான் என்றும் ஈமான் கொள்வது. மேலும் அவனுக்குத் தாயும் இல்லை, தந்தையுமில்லை, மனைவியும் இல்லை, மக்களும் இல்லை. எல்லா உயிர்கட்கும் உணவைக் கொடுப்பவன்

அவனேயாகும். அவனுக்குச் சரியாக உலகில் எவரும் இல்லே.

2. இரண்டாவதாக மலக்குகள் உண்டென ஈமான் கொள்வது; மலக்குகள் ஒளியினுல் படைக்கப்பட்டவர்கள்; ஆண்டவனே எந்நேரமும் வணங்குவார்கள்; ஆண்டவனுடைய கட்டளேகளே நிறைவேற்றுவார்கள் எனவும் ஈமான் கொள்வது.

3. மூன்ருவதாக உலகத்திற்கு நான்கு வேதங்களே அனுப்பினுன். அவ்வேதங்கள் யாவும் உண்மையானவை என ஈமான் கொள்வது.

4. நான்காவதாக ஆண்டவன் உலக மக்களேத் திருத்துவதற்கு நபிமார்களே அனுப்பினுன். அவர்கள் உலக மக்களே நன்கு திருத்திஞர்கள். அந்த நபிமார்களேக் கொண்டு ஈமான் கொள்வது.

5. ஐந்தாவதாக உலகில் உள்ள யாவரும் இறந்த பின்னர், மீண்டும் எழுப்பப்பெற்றுக் கேள்வி கணக்குகள் கேட்கப்படுவர். இப்படியான ஒரு கடைசி நாள் உண்டென்று ஈமான் கொள்வது.

6. ஆருவதாக உலகத்தில் நடைபெறும் எல்லாக் கருமங்களும் அல்லாஹ்வுடைய நாட்

டம் கொண்டே நடைபெறுகின்றன என்று ஈமான் கொள்வது.

## பயிற்சி

**விளக்கம் :**

1. நாம் எத்தனை காரியங்களைக் கொண்டு ஈமான் கொள்ள வேண்டும்?

2. அவைகளை அரபியில் கூறுக.

3. ஆருவதாக எதைப் பற்றி ஈமான் கொள்ள வேண்டும்?

4. "வ குதுபிஹி" என்பதன் கருத்தென்ன?

## 2. மலக்குகள்

ஈமானின் இரண்டாவது காரியம், மலக்குகளைக் கொண்டு ஈமான் கொள்வது என முந்திய பாடத்தில் படித்தோம். மலக்குகள் மனிதர்களைப் போன்றவர்கள் அல்லர். அவர்கள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள். அவர்களுக்கு உணவும் உறக்கமும் இல்லை. எப்போதும் ஆண்டவனை வணங்கிக்கொண்டே இருப்பார்கள். ஆண்டவனுடைய ஏவல்களை நிறை வேற்றுவார்கள். இம் மலக்குகளிலே முக்கியமானோர் பத்துப் பேர்களாகும்.

### பத்து மலக்குகள்

1. ஹஜ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம்
2. ஹஜ்ரத் மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம்
3. ஹஜ்ரத் இஸ்ராபீல் அலைஹிஸ்ஸலாம்
4. ஹஜ்ரத் இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம்
5. ஹஜ்ரத் றிள்வான் அலைஹிஸ்ஸலாம்
6. ஹஜ்ரத் மாலிக் அலைஹிஸ்ஸலாம்
7. ஹஜ்ரத் றகீப் அலைஹிஸ்ஸலாம்
8. ஹஜ்ரத் அதீத் அலைஹிஸ்ஸலாம்
9. ஹஜ்ரத் முன்கர் அலைஹிஸ்ஸலாம்
10. ஹஜ்ரத் நகீர் அலைஹிஸ்ஸலாம்

இவர்களின் வேலைகளாவன :

1. **ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) :** இவர் ஆண்டவனிடம் இருந்து, தூதுக்களையும் கட்டளைகளையும் கொண்டுவருவார். இவர் நபிமார்கட்கு வேதங்களைக் கொண்டுவந்து கொடுத்தவராவர்.

2. **ஹஜ்ரத் மீக்காயீல் (அலை) :** இவர் மழைக்கு அதிபதியாவார். ஆண்டவனிடமிருந்து உயிரினங்கட்கு உணவைக் கொடுப்பவர் ஆவர்.

3. **ஹஜ்ரத் இஸ்ராபீல் (அலை) :** இவர் ஆண்டவனுடைய கட்டளைப்படி ஸூர் என்னும் ஊதுகுழலை எடுத்து ஊதுவார். முதலாம் முறை ஊதியதும் உலகம் அழிந்துவிடும். இரண்டாம் முறை ஊதியதும் உலகில் உள்ளவை யாவும் உயிர் பெற்றுவிடும்.

4. **ஹஜ்ரத் இஸ்ராயீல் (அலை) :** இவர் ஆண்டவனுடைய கட்டளைப்படி மனிதர்கள், உயிரினங்களின் உயிரை எடுப்பார்.

5. **ஹஜ்ரத் றிள்வான் (அலை) :** இவர் சுவர்க்கத்திற்கு அதிகாரியாக நியமிக்கப்பட்டுள்ளார்.

6. **ஹஜ்ரத் மாலிக் (அலை) :** இவர் நரகத்திற்கு அதிகாரியாக நியமிக்கப் பட்டுள்ளார்.

7. **ஹஜ்ரத் றகீப் (அலை) :**

8. **ஹஜ்ரத் அதீத் (அலை):** இவர்களிரண்டு பேரும் அடியார்களின் நன்மை தீமைகளை ஒன்றும் விடாமல் எழுதிக் கொள்வார்கள்.

9. **ஹஜ்ரத் முன்கர் (அலை),**

10. **ஹஜ்ரத் நகீர் (அலை):** இவர்களிரண்டு பேரும் மையித்தை கப்ரில் அடக்கிய பின்பு கேள்விகள் கேட்பார்கள்.

### பயிற்சி

**விளக்கம் :**

1. நாம் அறியவேண்டிய மலக்குகள் எத்தனை பேர்? அவர்கள் யார் யார்?
2. ஜிப்ரயீல் (அலை) அவர்களின் வேலை யென்ன?
3. ஸுர் ஊதுபவர் யார்? அதனால் என்ன நடக்கும்?
4. மையித்திடம் கேள்விகள் கேட்பவர் யார்?
5. நரகத்திற்கு அதிகாரி யார்?

**நிரப்பல் :**

1. மீக்காயில் (அலை) ——— அதிபதியாவார்.
2. முதலாவது ஸுர் ஊதியதும் —— —— விடும்.
3. சுவர்க்கத்திற்கு —— அவர்கள் அதிகாரியாவார்.
4. முன்கர், நகீர் என்போர் —— கேட்பார்கள்.

**சரி பிழை கூறல் :**

1. மீக்காயீல் (அலை) நரகத்திற்கு அதிகாரியாவார்.
2. இஸ்ராயீல் (அலை) மனிதர், உயிரினங்களின் உயிரை வாங்குபவராவார்.
3. இரண்டாம் முறை ஸுர் ஊதியதும் உலகம் அழிந்துவிடும்.
4. றகீப் (அலை) அதீத் (அலை) என்போர் கப்ரில் மையித்திடம் கேள்விகள் கேட்பார்கள்.

## 3. வேதங்கள்

சிறுவர்களே !

நாம் சென்ற பாடத்தில் ஈமானின் இரண்டாவது காரியமாகிய மலக்குகளைப் பற்றியும், அவர்களின் வேலைகளைப் பற்றியும் தெரிந்து கொண்டோம். இப்போது ஈமானின் மூன்ருவது காரியமாகிய வேதங்களைப் பற்றியும், அவ்வேதங்கள் அறிவிக்கப்பட்ட நபிமார்களையும் பற்றிப் பார்ப்போம்.

உலகத்திலுள்ள மக்கள் நேர்வழி பெறுவதற்காக ஆண்டவன் வேதங்களை இறக்கினுன். இதில் நல்ல போதனைகள் நிறைந்து இருக்கின்றன. இவ்வேதங்களை நபிமார்களுக்கு இறக்கினுன். இவை நான்காகும்.

அவையாவன :—

1. தௌராத் வேதம்
2. ஸபூர் வேதம்
3. இன்ஜீல் வேதம்
4. புர்கான் வேதம்

ஒவ்வொரு வேதமும் கொடுக்கப்பட்ட நபிமார்கள்.

1. **தௌராத்:** இது ஹஜ்ரத் மூஸா நபி (அலை) அவர்கட்கு அருளப்பட்டது.

2. **ஸபூர் :** இது ஹஜ்ரத் தாவூத் நபி (அலை) அவர்கட்கு அருளப்பட்டது.

**3. இன்ஜீல்:** இது ஹஜ்ரத் ஈஸா நபி (அலை) அவர்கட்கு அருளப்பட்டது.

**4. புர்கான் (குர்ஆன்):** இது நமது நாயகம் முஹம்மது முஸ்தபா ரசூல் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்ல மவர்களுக்கு அருளப் பட்டதாகும்.

## குர்ஆன்

இதுவே வேதங்களில் கடைசி வேதமாகும். இவ்வேதம் அரபிப் பாஷையில் உள்ளது. இதில் உலக மக்கள் நடந்துகொள்ளக் கூடிய சட்டங்கள் நிரம்பியுள்ளன. இதில் 114 அத்தி யாயங்கள் உள்ளன. 6666 வசனங்கள் அடங்கியுள்ளன. அத்தியாயங்கள்—ஸூராக் கள் என்றும், வசனங்கள் ஆயத்துக்கள் என வும் பெயர் பெறும். இக்குர் ஆனைப் பின்பற்றி நடப்பவர்களே உண்மை முஸ்லிம்களாவர். நாமும் இக் குர்ஆனின் கட்டளைப்படி நடந்து நல்ல முஸ்லிம்க ளாவோமாக.

## பயிற்சி

**விளக்கம் :**

1. ஆண்டவன் ஏன் வேதங்களை இறக்கினான் ?
2. வேதங்கள் எத்தனை ? அவை எவை ?
3. குர்ஆன் யாருக்கு அருளப்பட்டது ?
4. தாவூத் நபி (அலை) அவர்கட்கு அருளப்பட்ட வேத மெது ?
5. குர்ஆனில் எத்தனை ஆயத்துக்கள், ஸூராக்கள் இருக்கின்றன ?

## 4. சுத்தம்

மாணவர்களே !

நாம் எப்போதும் சுத்தமாகவும், பரி சுத்த மாகவும் இருக்க வேண்டும். இது மிக நல்ல பழக்கமுமாகும். யார் சுத்தமாக இல்லையோ அவர்களை மற்றவர்கள், கண்டதும் அரு வருப் படைவார்கள். இன்னும் அவர்கள் மேல் வெறுப்பும் கொள்வார்கள். யார் சுத்த மாக இருக்கின்றார்களோ அவர்களுடன் எல்லா ரும் அன்பாகப் பழகுவார்கள். பரிசுத்தமாக இருப்பவர்களை அல்லாஹ்வும் விரும்புகின்றான்.

நமது நாயகம் ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களும், "பரிசுத்தமாக இருப்பது ஈமானின் அரைவாசி ஆகும்" எனக் கூறியுள்ளார்கள்.

ஆகவே, இஸ்லாமியர்களாகிய நாம் தொழு வதற்கு முன்பு 'வுழூஉ' செய்து கொள்ள வேண்டும் என்பது கட்டாயக் கட்டளையாகும்.

### மல ஜலங்களை நீக்கிச் சுத்தஞ் செய்தல்

நாம் மல ஜலங்களைக் கழிக்கும் போது நல்ல பழக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

சிறுநீர் செய்யும் போது, எப்போதும் தலையையும் முழங்கால்களையும் மூடியிருக்க

வேண்டும். சிறு நீர் செய்த பின், நீரை உறுஞ்சக்கூடிய பொருளைக் கொண்டு நீரை உறுஞ்சச் செய்தபின், தண்ணீரால் கழுவ வேண்டும். நீரை உறுஞ்சுவற்காக காய்ந்த மண்கட்டி போன்றவை நல்லதாகும்.

மலம் கழிக்கச் செல்லும் போதும் தலையை மூடியே இருக்க வேண்டும். முடியுமான அளவு நன்ருகத் துப்புரவு செய்து கொள்ள வேண்டும்.

## உடலையும் உடையையும் சுத்தம் செய்தல்

நாம் வுழூஉ செய்து கொள்வதனுல் சுத்தம் ஏற்படுகின்றது. உதாரணமாக, வாய் கொப்பளிப்பதனுல் வாய் சுத்தம் அடைகின்றது. மூக்குத் துவாரத்தைக் கழுவுவதனுல் மூக்கும் சுத்தமாகின்றது. இதனுல் நாம் சுவாசிக்கும் காற்றும் சுத்தமானதாய் இருக்கின்றது. இதே போல் கை கால்கள் என்பனவும் சுத்தமாகின்றன.

அதே போல் நமது உடையையும் சுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டும். ஆடை கிழிந்ததாய் இருந்தாலும் நன்ருகத் தோய்த்துக் கட்ட வேண்டும். இதனுல் தான் பழங்காலத்தவர்களும் ''கந்தையானுலும் கசக்கிக் கட்டு'' என்று கூறினுர்கள். நமது உடலும் உடையும் சுத்தமாயிருப்பதனுல், நமது மனமும்

பரிசுத்தம் அடைகின்றது. புறச் சுத்தம் இருந்தால் தான் அகச்சுத்தமும் உண்டாகின்றது. புறமென்ருல் உடம்பின் வெளி உறுப்புக்களாகும்.—அதாவது கை, கால், முகம் என்பன போன்றவைகளாகும். அகச் சூத்தத்திற்குப் புறச் சுத்தமே அடையாளமாகும். இதனுலேயே பெரியோர் "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்று கூறினுர்கள்.

நமது உடலும், உடையும் இருக்கும் இடமும் எப்போதுஞ் சுத்தமாய் இருக்க வேண்டும். தொழுகைக்காக மாத்திரம் அன்றி எப்போதுஞ் சுத்தமாயிருத்தல் முஸ்லிம்களின் கடமையாகும்.

எவர்கள் உடல், உடை, வீடு, புத்தகம் முதலியவற்றை துப்புரவாக வைத்திருக்கின்ருர்களோ அவர்களுக்கு நோய் வரமாட்டாது. எப்போதும் சுகமாக இருப்பார்கள். துப்புரவில்லாத பிள்ளைகள் சொறி, சிரங்கு போன்ற நோய்களினுல் கஷ்டப்படுவார்கள். நோயுள்ள பிள்ளைகள் சந்தோஷம் இல்லாமல் சோம்பலுடையவர்களாய்இருப்பார்கள். படிக்க மனமில்லாதவர்களாய் இருப்பார்கள். ஆகவே நாமும் எப்போதும் சுத்தமாய் இருப்போமாக.

## பயிற்சி

**விளக்கம் :**

1. சுத்தமானவர்களைக் கண்டதும், மனிதர்கள் எப்படிப் பழகுவார்கள் ?

2. சுத்தம் இல்லாதவர்களைக் கண்டால் எப்படிப் பழகுவார்கள் ?•

3. சுத்தத்தைப் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) என்ன கூறியிருக்கிறார்கள் ?

4. மல ஜலங்களை எவ்வாறு சுத்தஞ் செய்ய வேண்டும் ?

5. நமது மனம் எவ்வாறு சுத்தம் அடையும் ?

**நிரப்பல் :**

1. ‘ கந்தையானாலும் —— கட்டு.’

2. நோயுள்ள பிள்ளைகள் —— இருப்பார்கள்.

3. அகத்தின் அழகு —— தெரியும்.

4. பரிசுத்தமாய் இருப்பது —— அரைவாசியாகும்.

5. சிறுநீர் செய்யும் போது —— யும் —— யும் மூடியிருக்க வேண்டும்.

## 5. வுழூஉ

சிறுவர்களே !

நாம் ஆண்டவனை தினம் ஐந்து நேரமும் தொழவேண்டும். தொழுவதற்கு முன் நாம் பரிசுத்தம் உள்ளவர்களாய் இருக்க வேண்டும். தொழுகைக்குச் செல்லு முன் வுழூஉ செய்து கொள்ள வேண்டும். அது எவ்விதம் எனக் கவனிப்போம் :—

முதலாவது—மணிக்கட்டுக்குக் கீழே இரு கைகளையும் குடைந்து கழுவ வேண்டும்.

இரண்டாவது—வாய்க்கும் மூக்குத் துவா ரத்திற்கும் தண்ணீர் செலுத்தித் துப்புரவு செய்யவேண்டும். வாயை நன்கு கொப்புளித் துக் கழுவ வேண்டும்.

மூன்ருவது–முகத்தைக் கழுவ வேண்டும். அதாவது தலையில் மயிர் முளைக்கும் இடமிருந்து நாடிக்குழி வரையும், இருகாதுகட்கும் இடைப் பட்ட பாகமாகும். இவ்வளவு பகுதியும் நன்ருகக் கழுவுப்படல் வேண்டும். இவ்வாறு முகத்தைக் கழுவும் போது ''வுழுவின் பர்ளை நிறைவேற்

றுகிறேன்'' என்று மனத்தில் நினைத்துக் கொள்ள வேண்டும்.

நான்காவது—முழங்கை உட்பட இரு கைகளையும் கழுவ வேண்டும்.

ஐந்தாவது—தலையில் ஒரு பங்கைத் தண்ணீர் கொண்டு நனைக்க வேண்டும். இதில் மூன்று மயிர்கள் முளைக்கும் இடம் நனைந்தாலும் போதுமானதாகும்.

ஆருவது—இரு காதுகளையும் குடைந்து கழுவ வேண்டும்.

ஏழாவது—இரண்டு கால்களையும் கழுவ வேண்டும். கால், கை என்பவைகளைக் கழுவும் போது முதல் வலதையும், பின் இடதையும் கழுவுதல் வேண்டும்.



## வுழூவில் கட்டாயக் (பர்ளு) கடமைகளாவன

முதலாவது நிய்யத்து. ''வுழூவின் பர்ளை நிறைவேற்றுகிறேன்'' என்று நினைத்தல்.

இரண்டாவது, மேலே குறிப்பிட்ட நிய்யத்தோடு முகத்தைக் கழுவுதல்.

மூன்ருவது, இரண்டு கைகளையும் கழுவுதல்.

நான்காவது, தலையில் ஒரு பகுதியை நனைத்தல்.

ஐந்தாவது, இரு கால்களையும் கழுவுதல்.

ஆருவது, மேலே கூறப்பட்டபடி ஒழுங்காகச் செய்தல் என்பனவாம்.

### பயிற்சி

**விளக்கம் :**

1. தொழுகைக்குச் செல்லுமுன் நாம் என்ன செய்ய வேண்டும் ?

2. வுழூவில் மூன்ருவது என்ன செய்யவேண்டும் ?

3. முகம் என்பது எவ்வளவாய் இருக்கும் ?

4. வுழூவின் கட்டாயக் கடமைகள் எத்தனை ? அவை எவை ?

## 6. வுழூவுக்குப் பின்னுள்ள ஓதல்கள்

நாம் எவ்வாறு வுழூஉச் செய்துகொள்ள வேண்டுமெனத் தெரிந்து கொண்டோம். இப்போது வுழூவுக்குப் பின்னல் ஓதவேண்டிய ஓதல்களைப் பார்ப்போம்.

நாம் வுழூஉ செய்து முடிந்ததும் கிப்லாவின் பக்கம் திரும்பிப் பின்வரும் துஆவை ஓதவேண்டும் :

اَشْهَدُ اَنْ لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ
لَهٗ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَرَسُوْلُهٗ
اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ مِنَ
الْمُتَطَهِّرِيْنَ وَاجْعَلْنِيْ مِنْ عِبَادِكَ الصَّالِحِيْنَ
سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَشْهَدُ اَنْ لَا اِلٰهَ
اِلَّا اَنْتَ اَسْتَغْفِرُكَ وَاَتُوْبُ اِلَيْكَ وَصَلَّى اللّٰهُ
عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ
وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ،

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝ اِنَّا اَنْزَلْنٰهُ فِيْ
لَيْلَةِ الْقَدْرِ ۝ وَمَا اَدْرٰىكَ مَا لَيْلَةُ الْقَدْرِ ۝
لَيْلَةُ الْقَدْرِ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ ۝ تَنَزَّلُ
الْمَلٰٓئِكَةُ وَالرُّوْحُ فِيْهَا بِاِذْنِ رَبِّهِمْ مِنْ كُلِّ
اَمْرٍ ۝ سَلَامٌ هِيَ حَتّٰى مَطْلَعِ الْفَجْرِ ۝

அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு (என்ற கலிமாவை ஓதியபின்) அல்லாஹும் மஜ்அல்னீ மினத் தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முததஹ்ஹிரீன வஜ்அல்னீ மின் இபாதிகஸ் ஸாலிஹீன் சுப்ஹான கல்லாஹும்ம வபிஹம்திக அஷ்ஹது அன்லா இலாஹ இல்லா அன்த அஸ்தஹ்பிருக வஅதூபு இலைக வஸல்லல்லாஹு அலா ஸெய்யிதின முஹம்மதின் வஆலிஹி வஸஹ்பிஹி அஜ்மஈன் வல்ஹம்து லில்லாஹிரப்பில் ஆலமீன்.

(இந்த துஆவைஓதியபின் பின்வரும் ஸூரத்தையும் ஓதவேண்டும்.)

**பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம் ; இன்னு அன்ஸல்னாஹு பீ லைலதில் கதிரி வமா அத்ராக மாலைலதுல் கதிர். லைலதுல் கதிர். கைரும் மின் அல்பி ஷஹ்ர். தனஸ்ஸலுல் மலாயிகது வர்ரூஹு பீஹா பிஇத்னி றப்பி ஹிம் மின் குல்லி அம்ரின் ஸலாமுன் ஹிய ஹத்தா மத்லஇல் பஜ்ர்.**

இவைகளை ஓதி முடித்ததும் தொழுகைக்குச் செல்ல வேண்டும்.

# 7. அத்தஹிய்யாத்து

நாம் தொழுகைக்கு ஆயத்த மாகிவிட்டோம். அதற்கு முன், தொழுகைக்கு அவசியமான அத்தஹிய்யாத்தைப் பாடமிட்டுக்கொள்ள வேண்டும். அதாவது :

اَلتَّحِيَّاتُ الْمُبَارَكَاتُ الصَّلَوَاتُ الطَّيِّبَاتُ
لِلّٰهِ اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ
وَبَرَكَاتُهُ اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ
الصَّالِحِيْنَ اَشْهَدُ اَنْ لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَشْهَدُ
اَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللّٰهِ . اَللّٰهُمَّ صَلِّ عَلٰى
سَيِّدِنَا مُحَمَّدٍ .... وَعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ كَمَا
صَلَّيْتَ عَلٰى سَيِّدِنَا اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا
اِبْرَاهِيْمَ وَبَارِكْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ
مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلٰى سَيِّدِنَا اِبْرَاهِيْمَ وَعَلٰى
اٰلِ سَيِّدِنَا اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ ،

**அத்தஹிய்யாதுல் முபாரகாதுஸ் ஸலவாதுத் தய்யிபாது லில்லாஹி அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் னபிய்யு வரஹ்மதுல் லாஹி வபரகாதுஹூ அஸ்ஸலாமு அலைனு**

வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன், அஷ்ஹது அன் லாஇலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸுலுல் லாஹி ; அல்லாஹும்ம ஸல்லி அலா ஸெய்யிதிஞ முஹம்மதின்...(இவ்வளவும் முந்தின அத்தஹிய்யாத்தாகும்) வஅலா ஆலி ஸய்யிதிஞ முஹம்மதின் கமா ஸல்லேத அலா ஸய்யிதிஞ இப்ருஹீம வஅலா ஆலி ஸய்யிதிஞ இப்ருஹீம வபாரிக் அலா ஸய்யிதிஞ முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா ஸய்யிதிஞ இப்ருஹீம வஅலா ஆலி ஸய்யிதிஞ இப்ருஹீம இன்னக ஹமீதும் மஜீத்.

## 8. நபிகள் நாயகத்தின் (ஸல்) சரிதை

### நபிகள் நாயகத்தின் (ஸல்) இளமை

நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் திருமக்காவில் பிறந்தார்கள். அவர்கள் ரபீஉல் அவ்வல் மாதம் பன்னிரண்டாந் திகதி திங்கட்கிழமை அதிகாலையில் பிறந்தார்கள்.

நபிகள் நாயகத்தின் (ஸல்) குலப் பெயர் குரைஷ் ஆகும். அக்காலத்தில் அரபு தேசத்தில் ஒழுக்கமும் கண்ணியமும் நல்லறிவுமுள்ளவர்கள் குரைஷ் குலத்தவர்களே யாவர்.

நாயகம் (ஸல்) அவர்களின் தந்தையார் பெயர் **அப்துல்லாஹ்**. தாயார் பெயர் **ஆமினு**. பாட்டனுர் **அப்துல் முத்தலிப்** என்பவராவர். நாயகம் (ஸல்) அவர்கட்குப் பாலூட்டி வளர்த்தவர் **ஹலீமா** என்பவராவர்.

நாயகம் (ஸல்) அவர்கள் தன் தாயார் வயிற்றில் ஆறுமாதச் சிசுவாயிருக்கும்போதே தந்தையார் அப்துல்லாஹ் இறந்துவிட்டார்கள். நாயகம் (ஸல்) பிறந்து ஆரும் வயதிலே அருமைத் தாயார் ஆமினுவும் இறந்துவிட்டார்கள். எட்டாம் வயதிலே அன்போடு பாதுகாத்த பாட்டனுரும் இறந்துவிட்டார்கள்.

அனுதையான நபிகள் நாயகத்தை (ஸல்) பெரிய தந்தை **அபூதாலிப**வர்கள் அன்புடன் பாதுகாத்து வந்தார்கள்.

நபியவர்கள் இளம் வயதில் ஆடு மேய்த்தார்கள். அப்பருவத்திலும்கூட ஒரு பொய் பேசமாட்டார்கள். மற்றவர்கட்கு உதவி செய்வதே தன் கடன் என எண்ணியிருந்தார்கள். அவர்கள் கடைவீதிக்குப் போகும் போதெல்லாம் ஒவ்வொரு வீட்டையும் தட்டிக்கொண்டே போவார்கள். ஒவ்வொரு வீட்டார் இடமும் என்ன வேண்டும் என்று கேட்டு, ஒன்றும் விடாமல் தேவையான சாமான்களைக் கொண்டுவந்து கொடுப்பார்கள். அவர்கள் நம்பிக்கை, ஒழுக்கம்,

உண்மை என்ற நற்குணங்களில் சிறந்து விளங்கியமையால் அவர்களை "அல்அமீன்" (நம்பிக்கையாளர்) என அழைத்தனர். நபித்துவம் பெற்ற பிறகும் அவர்களுடைய பகைவருங்கூட அல்அமீன் என்றே அழைத்தனர். அப்படியானால் அவர்களின் ஒழுக்கம் எவ்வளவு சிறந்தது என்பதை யோசித்துப் பாருங்கள். மாணவர்களாகிய நாமும் அவர்களைப் போன்று நற்குண நல்லொழுக்கங்களில் சிறந்து விளங்குவோமாக.

## நாயகத்தின் பிள்ளைகள்

நமது நாயகம் (ஸல்) அவர்கட்கு ஏழு குழந்தைகள் பிறந்தனர். அவற்றில் மூன்று ஆண் குழந்தைகளும், நான்கு பெண் குழந்தைகளுமாவர்.

### ஆண் பிள்ளைகள் :

1. ஹஜ்ரத் காசிம் (ரலி)
2. ஹஜ்ரத் அப்துல்லாஹ் (ரலி)
3. ஹஜ்ரத் இப்ருஹீம் (ரலி)

### பெண் பிள்ளைகள் :

1. ஹஜ்ரத் ஸைனப் (ரலி)
2. ஹஜ்ரத் ருகையா (ரலி)
3. ஹஜ்ரத் உம்மு குல்தூம் (ரலி)
4. ஹஜ்ரத் பாத்திமா (ரலி)

என்பவர்களாவர்.

மேலே குறிப்பிட்ட ஏழு பிள்ளைகளில் ஹஜ்ரத் இப்ருஹீம் அவர்களின் தாயார், மாரியதுல் கிப்தியா என்பவராவர். ஏனைய ஆறு பிள்ளைகட்கும் கதீஜா (ரலி) அவர்களே தாயாராவர். இவர்கள் நபித்துவம் கிடைத்து பத்து வருடம் வரை வாழ்ந்தார்கள். அதன் பின் இறந்து விட்டார்கள்.

## பயிற்சி

**விளக்கம் :**

1. நாயகத்திற்கு ஆண்மக்கள் எத்தனை? பெண் மக்கள் எத்தனை ?
2. கதீஜா (ரலி) எப்போது இறந்தார்கள் ?
3. நபிகள் நாயகம் (ஸல்) எங்கே பிறந்தார்கள் ?
4. அவர்களின் குலப்பெயர் என்ன ?
5. "அல்அமீன்" என்று ஏன் அழைத்தனர் ?
6. அவர்கள் தாயார் தந்தையார் பெயரென்ன ?
7. அவர்கள் தாயார், தந்தையார் எப்போது இறந்தார்கள் ?

**சரி பிழை கூறல் :**

1. நாயகம் இந்தியாவில் பிறந்தார்கள் ?
2. அவர்களுக்குப் பாலூட்டி வளர்த்தவர் ஆமினுவாகும்.
3. அனுதையான நாயகத்தை அபூதாலிப் பாதுகாத்தார்கள்.
4. நாயகத்தின் ஆரும் வயதில் ஹலீமா இறந்து விட்டார்கள்.
5. அரபு தேசத்தில் ஒழுக்கம், கண்ணியமுள்ளவர்கள் குரைஷ் குலத்தினராவர்.

# 9. நபிப் பட்டம் கிடைத்தல்

நாயகம் (ஸல்) அவர்கட்கு நாற்பது வயதாகிவிட்டது. அக்காலத்தில் அங்கிருந்த அரபு மக்கள் பல மூடக் கொள்கையில் மூழ்கி இருந்தார்கள். ஒழுக்கங்கெட்ட வாழ்க்கையை நடத்தினுர்கள். பலவிதமான சிலைகளை வணங்கினுர்கள். முன்னூற்று அறுபது சிலைகளை வைத்துப் பூசை செய்தார்கள். பெண்களைக் கேவலமாக நடத்தினுர்கள். சில குடும்பத்தார்கள், பெண் குழந்தைகள் பிறந்தால் உடனே கொன்றுவிடுவார்கள். இவ்வாறு அந்த அரபு மக்கள் கெட்டுப் போயிருந்தார்கள். நாயகம் (ஸல்) அவர்கள் இவர்களை எப்படி நல்ல வழியில் திருத்த முடியும் என்று தனிமையில் இருந்து யோசிப்பார்கள். கொஞ்ச உணவும் நீரும் எடுத்துக் கொண்டு, மக்காவுக்கு அருகிலுள்ள ஹிரா குகைக்குள் போய் ஆண்டவனை நினைத்துக் கொண்டிருப்பார்கள்.

இவ்வாறு அவர்கள் ஆண்டவனை நினைத்துக் கொண்டிருக்கும்போது ஒரு நாள், ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அங்கு வந்தார்கள். அவர்கள் நாயகத்தைப் பார்த்து "முஹம்மதே! ஓதுவீர்களாக" எனக் கூறினுர்கள். உடனே நாயகம் அவர்கள் "ஓதத் தெரியாதே" என்று கூறினுர்கள். உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்

கள் நாயகம் அவர்களை மூன்று முறை இறுகக் கட்டி அணைத்தார்கள். அதன்பின் ஓதும்படி கூறினார்கள். நாயகம் (ஸல்) அவர்களும் ஓதினார்கள். ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பல முறை படித்துக் கொடுத்தார்கள். அதாவது :

اِقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِىْ خَلَقَ ۝ خَلَقَ الْاِنْسَانَ
مِنْ عَلَقٍ ۝ اِقْرَأْ وَرَبُّكَ الْاَكْرَمُ ۝ الَّذِىْ
عَلَّمَ بِالْقَلَمِ ۝ عَلَّمَ الْاِنْسَانَ مَا لَمْ يَعْلَمْ ۝

"இக்ரஃ பிஸ்மி ரப்பிகல் லதீ கலக். கலகல் இன்ஸான மின் அலக். இக்ரஃ வரப்புகல் அக்ர முல்லதீ அல்லம பில்கலம். அல்லமல் இன்ஸான மாலம் யஃலம்."

என்பதாகும். அன்றையில் இருந்தே நாயகம் (ஸல்) அவர்கட்கு நபிப் பட்டம் கிடைத்து விட்டது.

## மிஃராஜ் யாத்திரை

நபிப் பட்டம் கிடைத்த பின் நாயகம் (ஸல்) அவர்கள், பல ஊர்கட்கும் சென்று மார்க்கப் பிரசாரம் செய்தார்கள்.

ஒரு நாள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவிலுள்ள கஃபதுல்லாஹ்வின் முன் படுத்துக்கொண்டிருந்தார்கள். அப்போது ஜிப்ர

யீல் (அலை) அவர்கள், நாயகத்திடம் வந்தார் கள். அவர்கள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்து " நபியே! அல்லாஹ் உங்களை தன் சமுகத்திற்கு அழைக்கின்ருன் ; வாருங்கள் " என அழைத்தார்கள்.

முதலாவது நாயகம் (ஸல்) அவர்கள் பைத்துல் முகத்திஸ் பள்ளிவாசலுக்குப் போனுர்கள். அங்கே நாயகம் (ஸல்) அவர்கள் எல்லா நபிமார்களையும் தொழுவித்தார்கள். பின்னர், வானங்களை கடந்து போனுர்கள். அங்கே முன்புள்ள நபிமார்களைச் சந்தித்தார் கள். சுவர்க்கம், நரகம் என்பவைகள் அவர் கட்குக் காட்டப்பட்டன. அல்லாஹ்வை மிக மிக அருகில் போய்ப் பார்த்துப் பேசினுர்கள். எந்த நபிக்கும் இந்த மேலான தரிசனங் கிடைக்கவில்லை. எந்த மலக்குக்கும் கூடக் கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட மேலான திருத் தரிசனமே மிஃராஜாகும்.

### பயிற்சி

**விளக்கம் :**

1. அக்கால அரபு மக்கள் எப்படி வாழ்ந்தார்கள் ?
2. நாயகத்திடம் ஜிப்ரயீல் (அலை) என்ன கூறினுர் ?
3. ஜிப்ரயீல் (அலை) நாயகத்திற்குப் படித்துக் கொடுத்த தென்ன ?
4. நாயகம் (ஸல்) எங்கே படுத்துக் கொண்டிருந் தார்கள் ?
5. மலக்குகளுக்கும் எந்த நபிக்கும் கிடைக்காத பாக்கியம் எது ?

## 10. நபிகள் நாயகம் மதீனுவுக்கு ஹிஜ்ரத் செல்லல்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், உருவங்களை வணங்க வேண்டாமெனக் கூறினூர்கள். ஆண்டவனையே வணங்கும்படி போதித்தார்கள். தாம் கண்ட உண்மைகளை எடுத்துரைத்தார்கள். இப்போதனையைக் காபீர்கள் கேட்டுக் கோபங் கொண்டு நாயகத்தை எதிர்த்தார்கள். நாயகத்தைக் கொல்லவும் நினைத்தார்கள். எவ்வாறென்ருல், குறைஷிக் காபீர்கள் முஸ்லிம்களைக் கொடுமைப் படுத்தினூர்கள். இதனுல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முஸ்லிம்களை மதீனுவுக்குப் போகும்படி கூறினூர்கள். உடனே முஸ்லிம்கள் போகப் புறப்பட்டார்கள். குறைஷிகள் இதைக் கேள்விப் பட்டார்கள். உடனே அம்முஸ்லிம்களைப் போகவிடாமல் தடுத்தார்கள். ஆனுல் முஸ்லிம்கள் இரண்டு பேர் மூன்று பேராக ஒருவருக்குந் தெரியாமல் போய்விட்டார்கள். உடனே குறைஷிக் காபீர்கள் எல்லாரும் ஒன்று கூடினூர்கள். அக்கூட்டத்தில் அவர்கள் நபிகள் நாயகம் மதீனுவுக்குப் போவதைத் தடுக்கவேண்டுமென முடிவு கட்டினூர்கள். அது மட்டுமல்லாமல், அவர்கள் உயிரோடு இருந்தால் இஸ்லாம் பரவிவிடும். ஆகவே அவரைக் கொலை செய்யவேண்டுமென

வும் எண்ணினுர்கள். அதற்காக ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொரு மனிதன் தெரிந்தெடுக்கப்பட வேண்டும். அவர்கள் எல்லாரும் கையில் வாளுடன் சென்று, எல்லாரும் ஒரே நேரத்தில் . முஹம்மதை வெட்டவேண்டும் என்றும் தீர்மானித்தார்கள். அதே போல் யாவரும் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வீட்டைச் சூழ்ந்து கொண்டார்கள்.

நாயகம் (ஸல்) அவர்கள், தமது தோழர் அலி (ரலி) அவர்களைக் கூப்பிட்டு, அவர்களைப் பார்த்து “ ஆண்டவன் என்னை இந்த நாட்டை விட்டும் புறப்படும்படி உத்தரவு அளித்துள்ளான். இப்போது நீர் என்னுடைய கட்டிலில் என் போர்வையைப் போர்த்துப் படுத்துக் கொள்ளும். என்னிடம் சிலர் நம்பிக்கையாகத் தந்த பொருள்களை, காலையில் உரியவர்களுக்கு கொடுத்துவிட்டு, மதீனுவுக்கு வந்து சேரும்” எனக் கூறினுர்கள். உடனே அலி (ரலி) அவர்களும், நாயகம் (ஸல்) அவர்களுடைய கட்டிலில் படுத்துக் கொண்டார்கள். இரவு அதிக நேரமான பின், நாயகம் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வெளியில் வந்தார்கள். காபிர்கள் காணுமல் ஆண்டவன், அவர்களை மறைத்து விட்டான். பின்னர் அவர்கள் தமது உயிர்த்தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களின் வீட்டை அடைந்து அவர்களுடன் புறப்பட்

டார்கள். வழியில் இக்காபீர்களினுல் பல தொல்லேகள் ஏற்பட்டாலும் அவைகளிலிருந்து தப்பி மதீனுவுக்குச் சென்ருர்கள். இதனேயே "ஹிஜ்ரத்" என்று கூறப்படும். அன்று தொடக்கம் இஸ்லாமிய வருடமும் ஆரம்பமாகின்றது.

## பயிற்சி

**விளக்கம் :**

1. நாயகம் (ஸல்) அவர்கள் என்ன போதித்தார்கள் ?
2. நாயகம் (ஸல்) முஸ்லிம்களே ஏன் மதினுவுக்குப் போகும்படி கூறினுர்கள் ?
3. நாயகத்தை ஏன் காபீர்கள் கொல்ல நினேத்தனர் ?
4. அதற்காக என்ன செய்தார்கள் ?
5. நாயகம் (ஸல்), அலி (ரலி)யைக் கூப்பிட்டு என்ன கூறினுர்கள் ?
6. இஸ்லாமிய வருடம் எப்போது ஆரம்பமாகின்றது ?
7. ஹிஜ்ரத் என்ருல் என்ன ?

## 11. நாயகத்தின் நன்மொழிகள்

1. (வணக்கங்களில்) மேலான வணக்கம் குர்ஆனை ஓதுவதாகும்.
2. (திக்ரில்) மேலான திக்ரு 'லாஇலாஹ இல்லல்லாஹு' வாகும்.
3. தொழுகை சொர்க்கத்தின் திறவு கோலா யிருக்கிறது.
4. தானம் (தர்மம் செய்வது) ஆபத்துக்களைத் தடுத்துவிடும்.
5. பரிசுத்தமாக இருப்பது ஈமானின் ஒரு பகுதியாகும்.
6. மெய் (பேசுதல்) ஈடேற்றம் தரக்கூடியதாக இருக்கிறது; பொய் அழித்துவிடக்கூடிய தாய் இருக்கிறது.
7. கல்விக்காக உயிரைக் கொடுப்பவன் ஒரு பொழுதும் மரணமாவ தில்லை.
8. தொட்டில் முதல் மரணம்வரை அறிவைத் தேடுங்கள்.
9. சீனு தேசம் சென்றாலும் கல்வியைத் தேடுங்கள்.
10. ஸலாமைப் பரப்புங்கள்; (அதனால்) ஈடேற்றம் அடைவீர்கள்.

---

# உமா வாசகம்

## கீழ்ப்பிரிவு—8-ஆம் வகுப்புவரை

சிறந்த தமிழ் வாசினைப் பாட புத்தகங்கள், அதிகமான முஸ்லிம் பாடசாலைகளில் பாவிக்கின்றூர்கள். இக்காலத்திற்கேற்ப வண்ணப் படங்களால் தயாரிக்கப்பட்டவை. வித்தியாதிபதியால் அங்கீகரிக்கப்பட்டவை.

## இஸ்லாம் மத பாடம்

| | |
|---|---|
| 2-ம் வகுப்பு | ... 50 சதம் |
| 3-ம் ,, | ... 60 சதம் |
| 4-ம் ,, | ... 60 சதம் |
| 5-ம் ,, | ... 90 சதம் |
| 6-ம், 7-ம், 8-ம் வகுப்பு | ... அச்சில் |

# ISLAM MATHA PADAM

STANDARD II

A. M. GANEY

KALAIVANI BOOK CENTRE
130, TRINCOMALI St., KANDY

 [*Price* 50 Cts.